முன்பக்கத் தொடர்:-

காமன் வெல்த் நிதி மந்திரிகள் மகாநாடு அமெரிக்க வேலைத்திட்டத்திற்கு கதவைத் திறந்துவிட ஒப்புக் கொண்ட போதிலும் ஆங்கிலோ அமெரிக்க தகராறுகள் தீர்ந்துவிடப் போவதில்லை. நிதி மந்திரிகள் ஆயுத விஸ்தரிப்பிற்கான பல்வேறு முடிவுகளை எடுத்திருந்த போதிலும் ஆங்கிலோ அமெரிக்க தகராறுகள் தீர்ந்துவிடப் போவதில்லை. வளர்ந்து வரும் ஜனநாயக சக்திகளின் பலத்தை கணக்கிலெடுக்க அவர்கள் தவறிவிட்டனர். காமன் வெல்த் சர்க்கார்கள் இந்த முடிவுகளை அமுல் நடத்த முற்படும் பட்சத்தில் மக்களின் ஸ்தாபன ரீதியான கடுமையான எதிர்ப்பை சமாளிக்க வேண்டிவரும்; மக்களின் ஒன்றுபட்ட சக்திகளைக் கொண்டு அவைகளை தகர்த்தெறிவார்கள்.●●✱●●

பரிபூரண பிரஜா உரிமை:-

(1) பொது அமைதி பராமரிப்பு சட்டத்தை ரத்து செய்தல். விசாரணையின்றி சிறையில் அடைக்கும் முறை கிடையாது. இம்மாகாணத்தில் தடுப்புக் காவல் சட்டம் அமுல் செய்யப்படமாட்டாது. (2) பத்திரிகை சுதந்திரத்திற்கு உத்தரவாதம் அளிக்கப்படும். 1951 வருஷத்திய பத்திரிகை சட்டம் மாகாணத்தில் அமுலாக்கப்படாது (3) எவ்வித நிபந்தனையுமில்லாமலும், உடனடியாகவும் எல்லா அரசியல் கைதிகளையும் விடுதலை செய்தல். அரசியல் வாதிகள் மீதுள்ள வாரண்டுகளையும் வழக்குகளையும் வாபஸ் பெறுதல். (4) கிரிமினல் சட்ட திருத்த சட்டத்தை ரத்து செய்தல் (5) அரசியல் காரணங்களின் அடிப்படையில், வசூலிக்கப்பட்ட அபராதம், ஜாமீன் ஆகியவற்றை திருப்பி அளித்தல் (6) அரசியலில் ஈடுபட்டுள்ளவர் மீது 107, 151, பிரிவுகள் உபயோகிக்கப்படாது (7) கூட்டங்களுக்கு தடை விதிக்கும் அதிகாரம் உள்ள ஷரத்தை போலீஸ் சட்டத்தில் ரத்து செய்தல் (8) அமைதியான கூட்டங்களையும், ஊர்வலங்களையும் நடத்த தங்கு தடையற்ற உரிமைகள்.●✱●

நிலம் விவசாயம்:-

(1) நஷ்டஈடின்றி நிலப்பிரபுத்துவத்தை ஒழிப்பதின் மூலம் உழுபவனுக்கே நிலம் என்னும் கோட்பாட்டிற்கு அங்கீகாரம் (2) ஜமீன்தார்களுக்கு நஷ்டஈடு வழங்குவதை நிறுத்துவது. ஜமீன்தாரி ஒழிப்பு சட்டத்தை திருத்துவது. அதன் மூலம், ஜமீன்தார்களுக்கு அளிக்கப்பட்டுள்ள நஷ்டஈட்டை பெயரளவுக்கு மட்டுமே உள்ளதாக ஆக்குவது. ஜமீன்தார்கள் வசம் உள்ள பண்ணை நிலங்களையும் விவசாயிகளுக்கு மாற்றுவது. (3) நிலச் சொந்தக்காரர்களுக்கும், சாகுபடிக்காரர்களுக்கும் உற்பத்தியில் உள்ள பங்குகள் பற்றிய சுப்ரமண்யம் கமிட்டியின் சிபார்சுகளை அமுலாக்குவது. (4) மடங்கள், ஆலயங்கள், தரும ஸ்தாபனங்களின் நிலங்களை நேரடியாக ~~உற்பத்தியில்~~ உழுபவர்களுக்கு குத்தகைக்கோ வாரத்துக்கோ அளிப்பது. இடையில் உள்ள தரகர்களை ஒழிப்பது ஆகியவை சேர்த்த அதே கமிட்டியின் சிபார்சுகளை அமுல் செய்வது. (5) வாரதார்கள், குத்தகைதாரர்களுக்கு குடிவார உரிமை அளிப்பது. (6) ஜமீன்தார்கள் அல்லது நிலப்பிரபுக்களுக்கு கொடுபட வேண்டிய வார குத்தகை பாக்கிகளை ரத்து செய்தல் (7) நிலத்தை விட்டு வெளியேற்றப்பட்ட விவசாயிகளை புனரமைத்தல். (8) விவசாயத் தொழிலாளருக்கு இலவச குடியிருப்பு மனைகள் வழங்குவது ✱ பண்ணையாட்களுக்குள்ள கடன்கள் பூராவையும் ரத்து செய்வது ✱ வேலை நேரம் போதிய கூலி இதர வசதிகள் விவசாயத் தொழிலாளருக்கு நிர்ணயிக்கப்படவேண்டும் ✱ கட்டாயமாக வேலை வாங்குதல், சம்பளமின்றி வேலை வாங்குதல் தண்டிக்கத் தக்க குற்றங்களாகும் (9) விவசாய கடன்கள் பூரா சம்பந்தப்பட்ட மட்டிலும் கடன் ஒத்திவைப்பு ஒரு வருட காலத்திற்கு பிரகடனப்படுத்துதல். விவசாய கடன் பிரச்னையை ஆராய்ந்து கடன் பளுவை நீக்க ஒரு கமிட்டியை அமைப்பது. விவசாயிகளுக்கு கடன் வசதி. (10) தற்போது அமுலில் உள்ள நிலவரிமுறையை அகற்றி அதற்கு பதிலாக விவசாய வருமான மீது படிப்படியாக அதிகரிக்கும் விகிதாசாரத்தில் வரி விதித்தல். (11) விவசாயக் கருவிகள், உரம் ஆகியவற்றை நியாயமான விலையில் கூட்டுறவு ஸ்தாபனங்கள் மூலம் ஒழுங்காக விநியோகித்தல். (12) எல்லா சிறு நீர்ப்பாசன திட்டங்களும் உடனே பூர்த்தி செய்யப்பட்டு விடவேண்டும். (13) தரிசு நிலங்களை, நிலமற்ற விவசாயிகளுக்கு மாற்றி அவர்களுக்கு உதவி அளிப்பதன் மூலம் பயிர் செய்தல். (14) விவசாய மக்களின் தேவைக்கேற்ற முறையில் விவசாய, பொதுமராமத்து இலாக்காக்களின் சீர்திருத்தி அமைக்கப்பட வேண்டும்.●✱●